**तृष्णाहीनाशयस्थं त्रिशिखवरधरं त्र्यक्षमात्रेयभूषं**
**त्रेतानन्दं त्रिकोणस्थितिजुषमचलं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८०**

**த்ரைகு³ண்யாநாமதீதம் த்ரிஜக³த³பி⁴னுதம் ஸத்ரிவர்கா³பவர்க³ம்**
**த்ரையந்தாசார்யமூர்திம் த்ரிபுடிவிரஹிதம் த்ரிஸ்த²மப்யத்ரிரூபம் ।**
**த்ருஷ்ணாஹீநாஶயஸ்த²ம் த்ரிஶிக²வரத⁴ரம் த்ர்யக்ஷமாத்ரேயபூ⁴ஷம்**
**த்ரேதானந்த³ம் த்ரிகோணஸ்தி²திஜுஷமசலம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 280**

280. முக்குணங்களில் உண்டான பிர்ம்ம விஷ்ணு ருத்திரர்களுக்கு அதீதரும் மூன்று உலகங்களில் துதிக்கப்படுகிறவரும் தர்மார்த்த காமங்களோடு கூடின மோக்ஷத்தை அளிப்பவரும் வேதாந்த சாஸ்திரத்திற்கு குருவும், த்யாதா, தியானம், த்யேயம் என்கிற திருபுடி அற்றவரும், மூன்று உருவத்தோடு இருந்தபோதிலும் அம்மூன்று உருவம் அற்றவரும் அல்லது அத்திரி முனிவரின் ரூபமுள்ளவரும் ஆசையற்ற ஹிருதயத்தில் வஸிப்பவரும், சூலத்தை தரிப்பவரும், முக்கண்ணரும், அத்திரி மஹரிஷியின் புதல்வனை சந்திரனை தரித்தவரும், தக்ஷிணக்கினி, கார்ஹ பத்தியம், ஆஹவனீயம் என்கிற மூன்று அக்கினிகளில் (செய்கிற ஹோமங்களில்) பிரீதி உள்ளவரும், ஸ்ரீ சக்கரத்தின் நடுவிலுள்ள திரிகோணத்தில் பிந்து ரூபமாக இருப்பவரும், அசைவற்றவருமான குஞ்சிதாங்கிரிம்.

**स्वस्त्री वक्षोजयुग्मेयमधिककरुणं भावयित्वाचभक्त्या**
**रत्यासन्तर्प्य तेनप्रमुदितमनसोनृत्तमूर्तेः प्रसादात् ।**
**यस्याभूल्लोकजेतासुममयविशिखो मन्मथः श्रीकुमार :**
**तं देवं सुन्दरेड्यं द्युसदननटनं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८१**

**ஸ்வஸ்த்ரீ வக்ஷோஜயுக்³மேயமதி⁴ககருணம் பா⁴வயித்வாசப⁴க்த்யா**
**ரத்யாஸந்தர்ப்ய தேனப்ரமுதி³தமனஸோந்ருத்தமூர்தே: ப்ரஸாதா³த் ।**
**யஸ்யாபூ⁴ல்லோகஜேதாஸுமமயவிஶிகோ² மன்மத²: ஶ்ரீகுமார :**
**தம் தே³வம் ஸுந்த³ரேட்³யம் த்³யுஸத³னநடனம் குஞ்சிதாங்க்⁴ரிம்**
**ப⁴ஜே(அ)ஹம் ॥ 281**

281. புஷ்பமயமான பாணங்களை உடையவனும் லக்ஷ்மிக்கு புதல்வனுமான மன்மதன் தனது பத்தினியின் இரண்டு வக்ஷோஜங்களில் மிகவும் கருணையோடு கூடின யாதொரு பரமேச்வரனை மிகவும் பக்தியோடு பாவனை செய்து (பூஜித்து) கிரீடையினலே ஸந்தர்பணம் செய்து இக்கிருத்தியத்தினல் ஸந்தோஷ மனஸோடு கூடின யாதொரு பரமேச்வரனின் பிரஸாதத்தால் உலகங்களை ஜயிக்கிறவனுக ஆனுனே அப்படிப்பட்ட தேவரும் ஸுந்தரனலே (ஸுந்தர மூர்த்தி நாயனர்) துதிக்கப்பட்டவரும், ஆகாச சபையில் நடனம் செய்கிறவருமான குஞ்சிதாங்கிரிம். (இக்கதை சங்கர ஸம்ஹிதையில் உள்ளது. மந்தரசாஸ்திர வாமசாரத்தில் இவ்வித அனுஷ்டானம் கூறப்பட்டுள்ளதே.)

**आयुर्यत्कैटभारे : परममभिमतं पूर्णतामेतितावत्**
**कल्पोयस्यक्षणार्धो भवति च सुगमः किञ्चिदंशेनहीनः ।**
**इत्याहुर्वेदवाचः किमुतशतधृतेः किञ्चदिक्पालकानां**
**तं कालं कालभक्षं फणिफणनटनं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८२**

**ஆயுர்யத்கைடபா⁴ரே : பரமமபி⁴மதம் பூர்ணதாமேதிதாவத்**
**கல்போயஸ்யக்ஷணார்தோ⁴ ப⁴வதி ச ஸுக³ம: கிஞ்சித³ம்ஶேனஹீன: ।**
**இத்யாஹுர்வேத³வாச: கிமுதஶதத்⁴ருதே: கிஞ்சதி³க்பாலகானாம்**
**தம் காலம் காலப⁴க்ஷம் ப²ணிப²ணனடனம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 282**

282. விஷ்ணுவுக்கு ஆயுளானது எவ்வளவுக்குள் பூர்த்தியடைகிறதோ அவ்வளவான கற்பம் (கற்பம் என்பது ஓர் கால விசேஷம்) யாதொரு பரமேச்வரனுக்கு கொஞ்சம் குறைந்ததும் ஸுகமாய் செல்லக்கூடியதுமான அரைக்ஷண காலமாக ஆகிறது என்று வேதவாக்குகள் கூறுகின்றன. பிர்ம்மன் இந்திரன் முதலிய திக் பாலகர்களின் காலஹோரையை சொல்ல வேண்டுமா? அப்படிப்பட்ட காலஸ்வரூபியும் (பிரளய காலத்தில்) காலனையும் பக்ஷிக்கிறவரும், பாம்பின் படத்தின் மேல் நின்று நடனம் செய்கிறவருமான குஞ்சிதாங்கிரிம்.

**कालीं चण्डोर्ध्वनृत्तावनतमुखगणां ब्रह्मचामुण्डिकाख्यां**
**गौरी कोपाग्निजातां दितिसुतभयदामंशयुक्तां विधातुः ।**
**स्वागश्शमत्यै नितान्तं सविधकृतनुतिं यः कृपापूणदृष्ट्या**
**रक्षन्स्वक्षेत्रपालामकुरुतपरमं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८३**

**காலீம் சண்டோ³ர்த்⁴வந்ருத்தாவனதமுக²க³ணாம் ப்³ரஹ்மசாமுண்டி³காக்²யாம்**
**கௌ³ரீ கோபாக்³நிஜாதாம் தி³திஸுதப⁴யதா³மம்ஶயுக்தாம் விதா⁴து: ।**
**ஸ்வாக³ஶ்ஶமத்யை நிதாந்தம் ஸவித⁴க்ருதனுதிம் ய: க்ருபாபூணத்³ருஷ்ட்யா**
**ரக்ஷன்ஸ்வக்ஷேத்ரபாலாமகுருதபரமம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 283**

283. பயங்கரமான ஊர்த்துவ தாண்டவத்தில் தோல்வி அடைந்ததினுல் வணங்கின முகத்தை உடையவளும், பிர்ம்ம சாமுண்டிகா என்ற பெயர் உள்ளவளும், அம்பிகையின் கோபத்தீயில் உதித்தவளும், அசுரர்களுக்கு பயத்தை கொடுக்கிறவளும், பிரம்மாவின் அம்சத்தோடு கூடினவளும், தனது அபராதத்தைப் போக்கடிக்க வேண்டி ஸமீபத்தில் மிகவும் துதிக்கிறவளுமான காளியை யாதொரு பரமேச்வரன் கிருபையோடு கூடின பார்வையினுல், ரக்ஷித்து தனது க்ஷேத்திர பாலிகையாக இருக்கும்படி செய்தாரோ அப்படிப்பட்ட ச்ரோஷ்டராக குஞ்சிதாங்கிரிம். இது வியாக்ரபுர மாஹாத்மியத்தில் உள்ளது.

**குறிப்பு**: இத்தேவியின் கோயில் ஸ்ரீ நடராஜராலயத்திற்கு வடபுறம் இரண்டு பர்லாங்கு தூரத்தில் சிவப்பிரியை என்கிற தீர்த்தத்தின் கீழ்புறத்தில் மேற்கு முகமாக அமைக்கப்பட்டு உள்ளது. தில்லைக்காளி, பிர்ம்மசாமுண்டி என்கிற பற்பல நாமங்களால் போற்றப்பட்டும், நான்கு முகங்கள், நான்கு கைகள் கொண்டும் பிரேதாஸனத்தி

லமர்ந்து பக்தர்களின் இஷ்டங்களை எளிதில் அளித்தும், இத்தேவி பிரகாசிக்கிறாள். ஸ்ரீ நடராஜரை தரிசித்த பலன் இத்தேவியை தரிசித்தால்தான். சித்திக்குமென்று புராண ரஹஸ்யம் இத்தேவியைப் பற்றிய உபாஸனாக்ரமங்கள், ஸ்ஹஸ்ரநாமம், த்ருசதீ முதலியவை பிர்ம்மயாமளம் என்கிற மந்திர சாஸ்த்திரத்தில் கூறப்பட்டுள் ளவை. இத்தேவியின் பூஜை முதலியவை வைதீக முறைப்படி தில்லைவாழ்ந்தணர் களால் அனுஷ்டிக்கப்படுகிறது. இத்தேவிக்குப் பிரதி வருஷம் வைகாசி மாதத்தில் உத்ஸவம் நடத்தி பிறகு ஸ்ரீ நடராஜருக்கு உத்ஸவம் நடத்தப்படுகிறது. மற்றும் பற்பல இதிஹாஸங்கள் உள. விக்கிரமார்கனென்னும் அரசனும், காளிதாஸன் என்கிற மஹாகவியும் இத்தேவியை உபாஸித்து இத்தேவியின் அருளால் இரண்டா யிரம் வருஷம் அரசனுகவும், எல்லா கவிகளினுல் போற்றப்பட்டவனுகவும் ஆனுர் கள்.

**(विक्रमार्वनृपेन्द्रेण कालिदासेनसेविताम् ।**
**साक्षात्कुर्वेसदाभद्रां शिवताण्डवसाक्षिणीम् ॥)**

**(விக்ரமார்வந்ருபேந்த்³ரேண காலிதா³ஸேனஸேவிதாம் ।**
**ஸாக்ஷாத்குர்வேஸதா³ப⁴த்³ராம் ஶிவதாண்ட³வஸாக்ஷிணீம் ॥)**

என்று கூறுகிறுர்கள்.

**सर्वेशं सर्वसत्वप्रकृतिमविकृतिं सर्वदं सर्वभूषं**
**सर्वातीतं सदाख्यं सकरुणनयनं सर्ववेदान्तसारम् ।**
**सत्यं सद्व्योमसंस्थं सनकमुनिमुखैरर्चितं सामगीत्या**
**उत्साहं संसदीशं सकलकविनुतं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८४**

**ஸர்வேஶம் ஸர்வஸத்வப்ரக்ருதிமவிக்ருதிம் ஸர்வத³ம் ஸர்வபூ⁴ஷம்**
**ஸர்வாதீதம் ஸதா³க்²யம் ஸகருணநயனம் ஸர்வவேதா³ந்தஸாரம் ।**
**ஸத்யம் ஸத்³வ்யோமஸம்ஸ்த²ம் ஸனகமுனிமுகை²ரர்சிதம் ஸாமகீ³த்யா**
**உத்ஸாஹம் ஸம்ஸதீ³ஶம் ஸகலகவினுதம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 284**

**284.** எல்லாவற்றிற்கும் ஈசரும் ஸர்வ பிராணிகளுக்கும் காரணரும், காரணமில்லாதவரும், எல்லாவற்றையும் அளிப்பவரும், எல்லாவற்றையும் அணிந் தவரும், எல்லாம் கடந்தவரும், ஸத் என்பவரும், கருணை வாய்ந்த கண்களை உடையவரும், எல்லா வேதாந்தங்களிலும் ஸாரமாக கூறப்படுகிறவரும், ஸத்யரும், ஸத்ரூபமான ஆகாசத்தில் இருப்பவரும், ஸனகர் முதலிய முனிவர்களால் பூஜிக்கப் பட்டவரும், ஸாமகானத்தில் உத்ஸாஹத்தோடு கூடினவரும், ஸபைக்கு ஈசரும், ஸகல கவிகளால் துதிக்கப்படுபவருமான குஞ்சிதாங்கிரிம்.

**कर्तुं चाकर्तुमेतत्सकलमपि जगच्चान्यथा कर्तुमीशः**
**शक्तश्चाकाशतुल्यो भवितुमपिशिवो यस्समाधिक्यशून्यः ।**
**जाग्रत्स्वप्नातिशायिपृथुतरसुखकृत्स्थान संस्थोऽपि नैजां**
**मायामाविष्करोति त्रिविधगुणमयीं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८५**

**கர்தும் சாகர்துமேதத்ஸகலமபி ஜக³ச்சான்யதா² கர்துமீஶ:**
**ஶக்தஶ்சாகாஶதுல்யோ ப⁴விதுமபிஶிவோ யஸ்ஸமாதி⁴க்யஶூன்ய: ।**
**ஜாக்³ரத்ஸ்வப்னாதிஶாயிப்ருது²தரஸுக²க்ருத்ஸ்தா²ன ஸம்ஸ்தோ²(அ)பி நைஜாம்**
**மாயாமாவிஷ்கரோதி த்ரிவித⁴கு³ணமயீம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 285**

285. யாதொரு பரமேச்வரன் இந்த ஸகல உலகங்களை படைப்பதற்கும், படைக்காமல் இருப்பதற்கும், வேறுவிதமாக செய்வதற்கும் இவைகளில் ஸம்பந்தம் அன்றி ஆகாசம்போல் இருப்பதற்கும் ஸாமர்த்தியம் வாய்ந்தவரோ, தனக்கு ஒப்புயர்வு இல்லாதவரோ, அப்படிப்பட்ட பரமேச்வரன் ஜாக்ரம், ஸ்வப்பனம், ஸுஷுப்தி இவ்வஸ்தைகளில் பெரிய சுகத்தை உண்டு பண்ணுகிற ஸ்தானத்தில் இருந்த போதிலும் பெரிய சுகத்தை உண்டு பண்ணுகிற ஸ்தானத்தில் இருந்தபோதிலும் மூன்று குணங்களின் விகாரமான தனது மாயையை ஏவல் செய்கிறரோ அப்படிப் பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**साकं गौर्याहिमाद्रेर्निकटवरतटे सञ्चरन्योनिजास्य**
**स्वेदोद्भूतं प्रभाभिर्विजितदिनकरं बालमाहूयमोदात् ।**
**भौमाभिख्यामजालिग्रहयुगमनृणाधीश्वरत्वं चवाहं**
**शक्तिं भूषां ददौ तं दिविचरविनुतं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८६**

**ஸாகம் கௌ³ர்யாஹிமாத்³ரேர்நிகடவரதடே ஸஞ்சரன்யோநிஜாஸ்ய**
**ஸ்வேதோ³த்³பூ⁴தம் ப்ரபா⁴பி⁴ர்விஜிததி³னகரம் பா³லமாஹூயமோதா³த் ।**
**பௌ⁴மாபி⁴க்²யாமஜாலிக்³ரஹயுக³மந்ருணாதீ⁴ஶ்வரத்வம் சவாஹம்**
**ஶக்திம் பூ⁴ஷாம் த³தௌ³ தம் தி³விசரவினுதம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 286**

286. ஹிமய பர்வதத்தின் தாழ்வரையில் யாதொரு பரமேச்வரன் கௌரியோடுகூட ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் தருணம் தனது முகத்தில் உள்ள வேர்வையில் இருந்து உண்டானதும் காந்தியினுல் ஸூர்யனை அதிக்கிறமித்ததுமான குழந்தையை கூப்பிட்டு பௌமன் என்கிற பெயரையும், மேஷம், விருச்சிகம் என்கிற இரண்டு வீட்டையும், கடனைப் போக்கடிக்கிற சக்தியையும் (ஆடு) வாஹனத்தையும், சக்தியாயுதத்தையும், ஆபரணத்தையும் அக்குழந்தைக்கு அளித்தாரோ அப்படிப்பட்ட தேவர்களால் துதிக்கப்பட்டவரான குஞ்சிதாங்கிரிம். இக்கதை பாத்மத்தில் கூறப்பட்டுள்ளது.

**यस्मिन्दृष्टे परस्मिन्नचलतिहिमनो देहभाजां कदाचित्**
**यस्मात्कुत्रापि नान्योभवति च परमोदेवता सार्वभौमः ।**
**एकोदाधर्तितिर्यनिजवपुषि जगत्प्रोतमोतं समस्तं**
**तं चित्रं चित्रनृत्तप्रमुदितगिरिजं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८७**

**யஸ்மிந்த்³ருஷ்டே பரஸ்மின்னசலதிஹிமனோ தே³ஹபா⁴ஜாம் கதா³சித்**
**யஸ்மாத்குத்ராபி நான்யோப⁴வதி ச பரமோதே³வதா ஸார்வபௌ⁴ம: ।**
**ஏகோதா³த⁴ர்திதிர்யநிஜவபுஷி ஜக³த்ப்ரோதமோதம் ஸமஸ்தம்**
**தம் சித்ரம் சித்ரந்ருத்தப்ரமுதி³தகி³ரிஜம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 287**

287. யாதொரு பரமேச்வரன் பார்க்கப்பட்டிருக்கும் பொழுது பிராணிகளின் மனஸ் ஒரு மையத்திலும் சலிக்கிறது இல்லையோ, யாதொரு பரமேச்வரனைக் காட்டிலும் வேறு உத்தம தேவதை இல்லையோ ஒருவனாக இருந்து தனது சரீரத்தில் குறுக்காக கோர்க்கப்பட்ட எல்லா உலகை தரிக்கிறரோ அப்படிப்பட்ட சித்திர ஸ்வரூபரும், ஆச்சர்யகரமான தாண்டவத்தினால் ஸந்தோஷித்த பார்வதியோடு கூடினவருமான குஞ்சிதாங்கிரிம்.

**कश्चित्भूपालसूनुर्वृषभ मुनिवरस्योपदेशात् यदीयां**
**शैवीं विद्यां जपन्यत्कवचनुतिमपि प्राप्तकामोबभूव ।**
**तं शर्वं वारिचाक्षद्द्रुहिणसुरपति प्रेतनाथाग्निरक्षः**
**पाशीवाय्वीशयक्षद्युमणिशशिनुतं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८८**

**கஶ்சித்பூ⁴பாலஸ்ருனுர்வ்ருஷப⁴ முனிவரஸ்யோபதே³ஶாத் யதீ³யாம்**
**ஶைவீம் வித்³யாம் ஜபன்யத்கவசனுதிமபி ப்ராப்தகாமோப³பூ⁴வ ।**
**தம் ஶர்வம் வாரிசாக்ஷத்³த்³ருஹிணஸுரபதி ப்ரேதநாதா²க்³நிரக்ஷ:**
**பாஶீவாய்வீஶயக்ஷத்³யுமணிஶஶினுதம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 288**

288. ஓர் அரசகுமாரன் விருஷபர் என்கிற முனிச்ரேஷ்டரின் உபதேசத்தால் யாதொரு பரமேச்வரனின் பஞ்சாக்ஷரத்தையும் சிவகவசம் என்கிற ஸ்துதியையும் ஜபித்து ஸகல இஷ்டங்களை அடைந்தானோ அப்படிப்பட்ட சர்வரும் விஷ்ணு, பிர்மா, இந்திரன், யமன், அக்னி, நிருருதி, வருணன், வாயு, ஈசானன், குபேரன், ஸூர்யன், சந்திரன் இவர்களால் துதிக்கப்பட்டவருமான குஞ்சிதாங்கிரிம். இக்கதை பிர்மோத்திர கண்டத்திலுள்ளது.

**यद्रङ्गस्वर्णकुम्भं दिनकृदनुदिनं वीक्ष्यमेरुभ्रमेण**
**रथ्यं संरुध्यमध्ये क्षणमपि निवसन्यत्सपर्या सुजातम् ।**
**घण्टाभाङ्कारघोषं त्रिशतदशमखीवेदमन्त्रांश्चभूयः**
**श्रुत्वातिल्लीवनाख्यं पुरमितिमनुते कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २८९**

**யத்³ரங்க³ஸ்வர்ணகும்ப⁴ம் தி³னக்ருத³னுதி³னம் வீக்ஷ்யமேருப்⁴ரமேண**
**ரத்²யம் ஸம்ருத்⁴யமத்⁴யே க்ஷணமபி நிவஸன்யத்ஸபர்யா ஸுஜாதம் ।**
**க⁴ண்டாபா⁴ங்காரகோ⁴ஷம் த்ரிஶதத³ஶமகீ²வேத³மந்த்ராம்ஶ்சபூ⁴யः**
**ஶ்ருத்வாதில்லீவனாக்²யம் புரமிதிமனுதே குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 289**

289. யாதொரு பரமேச்வரனுடைய ஸபையின் தங்க ஸ்தூபியை ஸூர்யன் ஒவ்வொரு நாளும் பார்த்து மஹாமேரு என்கிற பிராந்தியால் தனது குதிரையை அடக்கி ஆகாசமத்தியில் சிறிது நேரம் வஸித்து யாதொரு பரமேச்வரனுடைய பூஜா காலத்திலுண்டான மணி ஓசையையும், திருஸஹஸ்ர முனிச்வரர்களின் வேதமந்தி ரங்களையும் கேட்டு தில்லைவனம் என்று பெயருள்ள புறம் (சிதம்பரம்) என்று எண்ணுகிருனோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**कण्ठेकालोललाटे हुतभुगुरगराड्भूषणं चर्मवस्त्रं**
**भूतिग्रन्धोविहायो निलयमथपुनः पुष्पवन्तौचनेत्रे ।**
**वृत्तिर्भिक्षास्वकार्यं नटनमगसुताप्रेमकान्तागजास्यः**
**सूनुः यस्यातिचित्रं समजनिसदयं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९०**

**கண்டே²காலோலலாடே ஹுதபு⁴கு³ரக³ராட்³பூ⁴ஷணம் சர்மவஸ்த்ரம்**
**பூ⁴திக்³ரந்தோ⁴விஹாயோ நிலயமத²புனः புஷ்பவந்தௌசநேத்ரே ।**
**வ்ருத்திர்பி⁴க்ஷாஸ்வகார்யம் நடனமக³ஸுதாப்ரேமகாந்தாக³ஜாஸ்யः**
**ஸூனுः யஸ்யாதிசித்ரம் ஸமஜநிஸத³யம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 290**

290. கண்டத்தில் கருப்பு, நெற்றியில் நெருப்பு, பாம்பு, ஆபரணம், தோல் வஸ்திரம், விபூதி, சந்தனப்பூச்சு, ஆகாசம் இருப்பிடம், ஸூர்யன் சந்திரன் இரண்டு கண்கள், ஜீவனம், பிக்ஷை, செய்கை கூத்து, பர்வதத்தின் புதல்வி மனைவி, ஆனைமுகன் குமாரன் இவ்விதம் யாதொரு பரமேச்வரனுக்கு மிகவும் ஆச்சர்யகர மாக ஆனதோ அப்படிப்பட்ட தயவுள்ள குஞ்சிதாங்கிரிம்.

**यत्संसत्स्वर्णभित्तिं परितरनुपमास्स्वर्गनार्यः कराब्जैः**
**आदर्शाद्यष्टभद्रं कनकमणिमयं यस्यतुष्ट्यै वहन्त्यः ।**
**सेवां कुर्वन्ति पञ्चावरणमधिगतैर्ब्रह्मविद्येशपूर्वैः**
**स्तुत्यं तं चित्रकूटस्थितिभिरथसुरैः कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९१**

**யத்ஸம்ஸத்ஸ்வர்ணபி⁴த்திம் பரிதரனுபமாஸ்ஸ்வர்க³னார்யः கராப்³ஜைः**
**ஆத³ர்ஶாத்³யஷ்டப⁴த்³ரம் கனகமணிமயம் யஸ்யதுஷ்ட்யை வஹந்த்யः ।**
**ஸேவாம் குர்வந்தி பஞ்சாவரணமதி⁴க³தைர்ப்³ரஹ்மவித்³யேஶபூர்வைः**
**ஸ்துத்யம் தம் சித்ரகூடஸ்தி²திபி⁴ரத²ஸுரைः குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 291**

291. யாதொரு பரமேச்வரனுடைய ஸபையின் சுவற்றிற்கு நான்கு புறங்களி லேயும் ஒப்பற்றவர்களான தேவப் பெண்கள் மணிகளால் இழைக்கப்பட்ட கண்ணுடி

முதலிய அஷ்டமங்கலங்களை (கண்ணாடி, பூர்ணகும்பம், விருஷபம், யுக்மசாமரம், ஸ்ரீவத்ஸம், ஸ்வஸ்திகம், சங்கம், தீபம்) கைகளில் தரித்துக்கொண்டு ஸேவிக்கிறார் களோ, ஐந்து ஆபரணங்களை அடைந்தவர்களும் பிர்ம்ஹவித்யேச்வரர்களை ஆதியாய் உள்ளவர்களும் சித்திரங்களமைந்த கோஷ்டங்களிலுள்ளவர்களுமான தேவர்களால் துதிக்கப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**भक्तास्त्रैवष्टिसंख्याद्विजमुखकुलजायत्सपर्याविशेषैः**
**सारूप्यं यस्यनाम्नां मुहुरपिपाठनात् यस्यसामीप्यसिद्धिम् ।**
**सालोक्यं यस्यभक्तिप्रकरणजनतासङ्गसम्भाषणाद्यैः**
**सायुज्यं यस्य भावादनुपममभजन्कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९२**

**ப⁴க்தாஸ்த்ரைவஷ்டிஸங்க்²யாத்³விஜமுக²குலஜாயத்ஸபர்யாவிஶேஷைः**
**ஸாரூப்யம் யஸ்யநாம்னாம் முஹுரபிபாட²னாத் யஸ்யஸாமீப்யஸித்³தி⁴ம் ।**
**ஸாலோக்யம் யஸ்யப⁴க்திப்ரகரணஜனதாஸங்க³ஸம்பா⁴ஷணாத்³யைः**
**ஸாயுஜ்யம் யஸ்ய பா⁴வாத³னுபமமப⁴ஜன்குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 292**

292. அறுபத்திமூன்று ஸங்கியை உள்ளவர்களும் அந்தணர் முதலிய வகுப்பில் உதித்தவர்களுமான பக்தர்கள் (63 நாயன்மார்கள்) யாதொரு பரமேச்வரனுடைய பூஜா விசேஷங்களால் ஸாரூப்ய முக்தியையும்; நாம பாராயணத்திஞல் ஸாமீப்ய முக்தி யையும், பக்தர்களின் ஸங்கமத்தால் ஸாலோக்ய முக்தியையும், ஐக்கியதியானத்தி ஞல் ஸாயஜ்ய முக்தியையும் அடைந்தார்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**यच्चित्रस्तम्भकक्ष्यामधिविशदखिलप्राणिवर्गान्विशुद्धान्**
**कुर्वन्कश्चिन्महात्मा पुरुषमृगतनुर्योगिराड्यत्सभायाः ।**
**पूर्वस्मिन्द्वारदेशे निवसति हृदये सन्ततं यं विचिन्वन्**
**तं देवं चिद्विलासप्रकटितनटनं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९३**

**யச்சித்ரஸ்தம்ப⁴கக்ஷ்யாமதி⁴விஶத³கி²லப்ராணிவர்கா³ன்விஶுத்³தா⁴ன்**
**குர்வன்கஶ்சின்மஹாத்மா புருஷம்ருக³தனுர்யோகி³ராட்³யத்ஸபா⁴யாः ।**
**பூர்வஸ்மிந்த்³வாரதே³ஶே நிவஸதி ஹ்ருத³யே ஸந்ததம் யம் விசின்வன்**
**தம் தே³வம் சித்³விலாஸப்ரகடிதனடனம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 293**

293. புருஷமிருக ரூபத்தோடு கூடின மகாத்மாவான ஒரு யோகீச்வரர் சித்திர ஸ்தம்பங்களால் நிறைந்த ப்ராகாரத்தை அடைந்த பிராணிகளுடைய துராசாரங்க ளைப் போக்கடித்து ஆசாரவான்களாக செய்தும், நடராஜரை எப்பொழுதும் ஹிருதயத்தில் தியானம் செய்துகொண்டும் யாதொரு பரமேச்வரனின் சித்ஸபைக்கு கிழக்கு திக்கில் வஸிக்கிருரோ அப்படிப்பட்ட சித்விலாஸத்தை பிரகடனம் பண்ணுகிற நடனத்தை செய்கிற குஞ்சிதாங்கிரிம். இக்கதை சிதம்பர ரஹஸ்யத்தில் கூறப்பட்டுள்ளது.

**भेजे त्रैशङ्कवीयां स्थितिमपि च गले यस्षम्भोः करालः**
**क्ष्वेलः कल्पान्तकालज्वलनकबलनज्वालकल्लोलकीलः ।**
**वारणप्रेरणाभ्यां सातङ्काहार्यजायास्सभयमधुभिदो**
**भूयो भूयस्तमाद्यं जलदगलरुचिं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९४**

**பே⁴ஜே த்ரைஶங்கவீயாம் ஸ்தி²திமபி ச க³லே யஸ்ஷம்போ⁴ঃ கராலঃ**
**க்ஷ்வேலঃ கல்பாந்தகாலஜ்வலனகப³லனஜ்வாலகல்லோலகீலঃ ।**
**வாரணப்ரேரணாப்⁴யாம் ஸாதங்காஹார்யஜாயாஸ்ஸப⁴யமது⁴பி⁴தோ³**
**பூ⁴யோ பூ⁴யஸ்தமாத்³யம் ஜலத³க³லருசிம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 294**

294. யாதொரு சம்புவான் பரமேச்வரனுடைய கண்டத்தில் பயங்கரமும், கல்பாந்த காலத்தில் உண்டான அக்கினியை விழுங்குகிறதுமான ஜ்வாஜலகளால் வியாபித்த விஷம் (ஹாலா ஹலம்) ஆதங்கத்தோடு கூடின அம்பிகையினுடைய தும் பயத்தோடு கூடின விஷ்ணுவினுடையதுமான அடிக்கடி உண்டான தடையினு லேயும் பிரேரஜணயினுலேயும் திரிசங்குவின் ஸ்திதியை (மத்தியில் இருக்குகை யை) அடைந்ததோ அப்படிப்பட்ட ஆத்யரும் மேகம் போன்ற கண்டகாந்தியையு முள்ள குஞ்சிதாங்கிரிம்.

**लोकेष्वद्वैतविद्यां प्रकटयितुमनायस्स्वयं कृत्तिवासाः**
**मोदात्सर्वज्ञपीठस्थितिजुषममलं शङ्कराख्यं यतीन्द्रम् ।**
**स्वांशान्नैजाङ्क्षिपूजा प्रशमिततमसां भूसुराणां कुलाब्धौ**
**उत्पाद्यान्वग्रहीत्तं शुकमुनिविनुतं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९५**

**லோகேஷ்வத்³வைதவித்³யாம் ப்ரகடயிதுமனாயஸ்ஸ்வயம் க்ருத்திவாஸாঃ**
**மோதா³த்ஸர்வஜ்ஞபீட²ஸ்தி²திஜுஷமமலம் ஶங்கராக்²யம் யதீந்த்³ரம் ।**
**ஸ்வாம்ஶான்னைஜாங்க்ஷிபூஜா ப்ரஶமிததமஸாம் பூ⁴ஸுராணாம் குலாப்³தௌ⁴**
**உத்பாத்³யான்வக்³ரஹீத்தம் ஶுகமுனிவினுதம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 295**

295. புலித்தோஜல தரித்த யாதொரு பரமேச்வரன் தானே ஸ்ந்தோஷத்தால் உலகத்தில் அத்வைத வித்தையை பிரகாசப்படுத்த இச்சைகொண்டு ஸர்வஞபீடம் ஏறினவரும் பரிசுத்தரும் சங்கரர் என்று பெயர் உள்ளவருமான ஓர் யதிச்சேஷ்டரை தனது அம்சத்திலிருந்து தனது சரண பூஜையினுல் அகற்றின அக்ஞானத்தை உடைய பிராம்மணர்களின் (திருஸஹஸ்ர முனீச்வரர்களின்) குலத்தில் உண்டு பண்ணி அனுக்கிரஹம் செய்தாரோ அப்படிப்பட்ட சுகமுனிவரால் துதிக்கப்பட்ட வரான குஞ்சிதாங்கிரிம்.

குறிப்பு:



॥ श्री सद्गुरुभ्योनमः ॥

॥ ஶ்ரீ ஸத்³கு³ருப்⁴யோநம꞉ ॥

**श्रीमच्छङ्करसद्गुरुर्विजयते व्यासोक्तसूत्रावलिं**
**व्याख्यातादशसङ्ख्यकोपनिषदोगीतां हरेर्वाग्भावाम् ।**
**शैवं भैरवशक्तिविष्णुगणपत्यकाभिधं षण्मतं**
**निर्णीतं भुविसर्ववित् यतिवरोह्यद्वैतसाम्राज्यभृत् ॥**

**ஶ்ரீமச்ச²ங்கரஸத்³கு³ருர்விஜயதே வ்யாஸோக்தஸூத்ராவலிம்**
**வ்யாக்²யாதாத³ஶஸங்க்²யகோபநிஷதோ³கீ³தாம் ஹரேர்வாக்³பா⁴வாம் ।**
**ஶைவம் பை⁴ரவஶக்திவிஷ்ணுக³ணபத்யகாபி⁴த⁴ம் ஷண்மதம்**
**நிர்ணீதம் பு⁴விஸர்வவித் யதிவரோஹ்யத்³வைதஸாம்ராஜ்யப்⁴ருத் ॥**

**आसीज्जन्म चिदम्बराभिधपुरे तत्रत्रिसाहस्रभू**
**देवानां च कुले मखीन्द्रसुतयोः सर्वज्ञवैशिष्टयोः ।**
**पित्रोर्यस्य पुराभगवतो गोविन्द योगीश्वरात्**
**सन्यासोपिसभेश्वरांशमतुलं सेवेगुरुं शङ्करम् ॥**

**ஆஸீஜ்ஜன்ம சித³ம்ப³ராபி⁴த⁴புரே தத்ரத்ரிஸாஹஸ்ரபூ⁴**
**தே³வானும் ச குலே மகீ²ந்த்³ரஸுதயோ꞉ ஸர்வஜ்ஞவைஶிஷ்டயோ꞉ ।**
**பித்ரோர்யஸ்ய புராப⁴க³வதோ கோ³விந்த³ யோகீ³ஶ்வராத்**
**ஸந்யாஸோபிஸபே⁴ஶ்வராம்ஶமதுலம் ஸேவேகு³ரும் ஶங்கரம் ॥**

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அவர்கள் ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தில் அவதாரம் செய்தார் என்று ஆனந்தகிரி சங்கர விஜயத்திலும், சிதம்பரஸாரமென்னும் கிரந்தத்திலும் கூறப்படுகிறது. தில்லைவாழந்தணர்களின் மரபைச் சார்ந்தவர்களும், யாஜுஷர்களும் ஆங்கீரஸகோததிரர்களுமான விசிஷ்டாம்பிகை விச்வஜித் தீக்ஷிதர் என்கிற பெரியோர்கள் அவர்களின் மாதா பிதாக்களாவார்கள். விசிஷ்டை என்கிற அன்னை தில்லை வாழந்தண மரபில் யாஜுஷ ஸ்ரீவத்ஸ கோத்திரத்தில் உதித்த ஸர்வஜ்ஞ தீக்ஷிதர் காமாக்ஷி அம்மாள் என்பவர்களின் புதல்வியாவாள். விசிஷ்டை என்கிற

அன்னைக்கு ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் அம்சமே, லோகத்திலுள்ள துர்மதங்களை அகற்றி வைதீக அத்வைத மதத்தை ஸ்தாபிக்க வேண்டி தேவர்களின் பிரார்த்தனையால் சங்கராசார்யராக அவதரித்தது. இம்மஹான் தனது பால்யத்தின் அனேக விசித்திர லீலைகளை செய்தும் உரியகாலத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டும், துர்வாஸர் அகஸ்தியர் முதலிய மஹர்ஷிகளிடமிருந்து சிதம்பர ரஹஸ்யம் முதலிய ஸகல வித்தைகளை அப்யஸித்தும், எல்லோர்களினுலேயும் மிகவும் போற்றப்பட்டவருமாக பிரகாசித்தார்.

அக்காலத்தில் மிகவும் பூஜ்யரும் தில்லைவாழந்தணர் மரபிலுதித்தவருமான ஸ்ரீ கணேசயோகீ என்கிற பெரியாரிடம் ஸ்ரீ மேதா தக்ஷிணுமூர்த்தியின் மந்திரத்தை உபதேசம் பெற்று ஸ்ரீ மூலநாதரின் தென்புற கோஷ்டத்தில் விளங்காநின்ற ஸ்ரீ தக்ஷிணு மூர்த்தியின் ஸன்னதியில் சிலகாலம் தான் ஸந்யாஸாச்ரமம் பெற வேண்டுமென்கிற எண்ணத்துடன் தபஸை அனுஷ்டித்தார்.

இவ்விதம் அனுஷ்டித்து இருக்கும் தருணம் பகவான் இவர் முன்பு தோன்றி மேற்கு கோபுரத்திலுள்ள குஹையில் ஸ்ரீ பதஞ்ஜலியின் அபராம்சரான கோவிந்த யோகீ என்கிற பெரியார் இருக்கிறுர். அவரிடம் சென்று உனது இஷ்டத்தை பூர்த்தி செய்துகொள்ளக் கடவாய் என்று அனுக்கிரஹித்து மறைந்தார்.

பிறகு சங்கரர் அக்குஹையை அடைந்து இவ்விஷயத்தை பகவத்கிருபையால் முன்பே உணர்ந்த ஸ்ரீ பதஞ்ஜலியின் அபராம்சரான அக்கோவிந்தயோகீந்தரரின் அனுக்கிரஹத்தால் ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்தார்.

ஸ்ரீ கோவிந்தயோகீந்தரர் தனது குருவான காளடபாதாசாரியரால் (மாண்டூக்கி யோபநிஷத்காரிகை ஸ்ரீ வித்யாரத்ன ஸூத்திரம் இவைகளை இயற்றியவர்) தன்னி டம் அளிக்கப்பட்டதும் வியாஸர் முதல் பரம்பராகதமுமான பிர்ம்ஹஸூத்திரம் முதலியவற்றை கொடுத்து இவைகளுக்கு அத்வைத பாஷ்யம் இயற்றி லோகத்தில் பிரகாசிக்கும்படி செய்து அத்வைத மதத்தை ஸ்தாபிப்பாயாக என்று இச்சங்கரருக்கு அருள் புரிந்தனர்.

சங்கரர் ஸ்ரீகோவிந்த பகவத்பாதாளிடமிருந்து பிர்ம்ஹ ஸூத்திரம் முதலிய வைகளைப் பெற்றுக்கொண்டு அவர் கட்டளையால் ஸ்ரீ சிவகாமஸுந்தரி என்கிற பிர்ம்ஹவித்யா ஸ்வரூபிணியான அம்பிகையின் ஸன்னதியில் அவைகளுக்கு பாஷ்யங்களை எழுதி முடித்தார்.

இக்கிரந்தங்களை தனது ஆசார்யாளான கோவிந்தபகவத் பாதாளுக்கும் களட பாதாசார்யாளுக்கும் படித்து காண்பித்தும் அவர்களால் நன்கு ஆசீர்வதிக்கவும் பெற்றுர்.

பிறகு ஸகல சிஷ்யர்களுடன் மத்யார்ஜுனம் முதலிய க்ஷேத்திரங்களை அடைத்து பரமனைப் போற்றியும் ஆங்காங்கு உள்ள துர்மதங்களை கண்டித்து வைதீக ங்களான சைவம் முதலிய ஷண்மதங்ளோடு அத்வைத மதத்தை ஸ்தாபித்தார்.

மற்றும் பற்பல சரித்திரங்கள் சங்கரவிஜயங்களில் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தில் ஒரு மடத்தையும் ஸ்தாபித்தார் எனவும் தெரிய வருகிறது. அவருடைய இறுதியில் காஞ்சீபுரத்தில் ஸித்தி அடைந்தபோதிலும் அவர் ஆத்மா சிதம்பரம் ஸ்ரீ நடராஜரிடம் மணிவாசகர்போல் ஐக்கியத்தை அடைந்ததாக பெரியோர் கள் கூறுகின்றனர்.

ஆசார்யரவர்கள் தில்லைவாழந்தண மரபைச் சார்ந்தவர்கள் என்பது பற்றி சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ பிர்ம்ஹவித்யானந்தபாரதி ஸ்வாமிகள் அவர்களால் எழுதப்பட்டு கி.பி.1946-ல் பிரசுரித்த ஸ்ரீ சங்கரவிஜய டிண்டிமம் என்னும் நூலில் நன்கு கூறப்பட்டு உள்ளது. பிறகும் பீட பரம்பரையில் இரண்டு ஆசார்ய ஸ்வாமிகள் தில்லைவாழந்தண மரபிலுள்ளவர்கள். பீடாதிபதிகளாக இருந்தார்கள் என்றும் மற்றும் இரண்டு ஸ்வாமிகள் இச்சிதம்பர க்ஷேத்திரத்திலேயே ஸித்தி அடைந்தார்கள் என்றும் தெரியவருகிறது.

ஸ்ரீ மதாதிசங்கரர் அவதார ஸ்தலம் சிதம்பரம் என்றும் அவர் மரபு தில்லை வாழந்தணர் குலம் என்றும் நிச்சயிக்க ஸ்ரீமதுமாபதிசிவத்தின் வாக்கும் நன்கு வலியுறுத்துகிறது.

**दृष्ट्राऽऽनन्दगिरिप्रयुक्तविजयं चैदम्बरं सारम**
**प्यत्रालोच्य पुरातनस्थितिमथश्रुत्वागिरं धीमताम् ।**
**प्रोक्तं शङ्करपूज्यपादचरितं संगृह्यभाषापथा**
**नूनं यच्चतदेववास्तवमितिज्ञेयं सदाद्वैतिभिः ॥**

**॥ श्रीशङ्करगुरुभ्योनमः ॥**

**த்[3]ருஷ்ட்ரா(ஆ)நந்த[3]கி[3]ரிப்ரயுக்தவிஜயம் சைத[3]ம்ப[3]ரம் ஸாரம**
**ப்யத்ராலோச்ய புராதனஸ்தி[2]திமத[2]ஶ்ருத்வாகி[3]ரம் தீ[4]மதாம் ।**
**ப்ரோக்தம் ஶங்கரபூஜ்யபாத[3]சரிதம் ஸங்க்[3]ருஹ்யபா[4]ஷாபதா[2]**
**நூனம் யச்சததே[3]வவாஸ்தவமிதிஜ்ஞேயம் ஸதா[3]த்[3]வைதிபி[4]ः ॥**

**॥ ஸ்ரீஶங்கரகு[3]ருப்[4]யோநமः ॥**

---

**पाताले मर्त्यलोके दिविचपुररिपोर्यानियानि प्रियाणि**
**क्षेत्राण्यासन्तदन्तस्थितिमधिजुषतां लिङ्गबेरादिमानाम् ।**
**हेतुः श्रीमूलनाथः शिवजनिमवरो यत्सभोदीचिभागे**
**कक्ष्यायां भाति नित्यं तमखिलजनकं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९६**

**பாதாலே மர்த்யலோகே தி[3]விசபுரரிபோர்யானியானி ப்ரியாணி**
**க்ஷேத்ராண்யாஸந்தத[3]ந்தஸ்தி[2]திமதி[4]ஜுஷதாம் லிங்க[3]பே[3]ராதி[3]மானாம் ।**
**ஹேதுः ஸ்ரீமூலநாத[2]ः ஶிவஜனிமவரோ யத்ஸபோ[4]தீ[3]சிபா[4]கே[3]**
**கக்ஷ்யாயாம் பா[4]தி நித்யம் தமகி[2]லஜனகம் குஞ்சிதாங்க்[4]ரிம் ப[4]ஜே(அ)ஹம் ॥ 296**

296. பாதளம், பூமி ஸ்வர்க்கம் இவைகளில் புறரிபுவான பரமேச்வரனுக்கு எந்த எந்த க்ஷேத்திரங்கள் பிரியமானவைகளோ அந்த க்ஷேத்திரங்களின் மத்தியில் பிரகாசிக்கிறதுகளான லிங்கங்கள் மூர்த்திகள் முதலியவைகளுக்கு காரணமும், ஸ்ரீ மூலநாதர் என்று பெயர் உள்ளதும் ஸ்வயம்புவுமான சிவலிங்கம் யாதொரு பரமேச் வரனுடைய ஸபையின் வடபுறத்தில் உள்ள பிராகாரத்தில் எப்பொழுதும் விளங்குகி றதோ அப்படிப்பட்ட எல்லாவற்றையும் சிருஷ்டித்தவரான குஞ்சிதாங்கிரிம்.

**ब्रह्मन्सृष्टिं यथावत्किमपि च कुरुषे भोहरे रक्षकत्वं**
**साध्यन्ते रुद्रभावं मम च वहसि किं पाल्यतेऽसौत्रिलोकी ।**
**केनानुष्ठीयते किं भुवि च मुनिवरैर्यज्ञइत्थं स्वसेवा**
**नम्र यो देववर्गं मुदयति वचसा कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९७**

**ப்3ரஹ்மன்ஸ்ருஷ்டிம் யதா2வத்கிமபி ச குருஷே போ4ஹரே ரக்ஷகத்வம்**
**ஸாத்4யந்தே ருத்3ரபா4வம் மம ச வஹஸி கிம் பால்யதே(அ)ஸௌத்ரிலோகீ ।**
**கேனானுஷ்டீ2யதே கிம் பு4வி ச முனிவரைர்யஜ்ஞஇத்த2ம் ஸ்வஸேவா**
**நம்ர யோ தே3வவர்க3ம் முத3யதி வசஸா குஞ்சிதாங்க்4ரிம் ப4ஜே(அ)ஹம் ॥ 297**

297. யாதொரு பரமேச்வரன் தன்ஜுன ஸேவித்து வணங்கினதான தேவஸமுதாயத்தைக் குறித்து ஓ பிர்ம்ஹாவே, படைக்கும் தொழிஜு முறைப்படி செய்கிறுயா? ஓ விஷ்ணுவே, காக்கும் தொழில் உனக்கு ஸாத்தியமா? ஓ ருத்திரா, உனது பாவத்தை வஹிக்கிறுயா? இப்பொழுது இந்த மூன்று உலகமும் எவரால் இரக்ஷிக்கப் படுகிறது. பூமியில் முனிச்ரேஷ்டர்களால் யாகம் அனுஷ்டிக்கப்படுகிறதா என்று இவ்விதம் தனது வார்த்தையிஞலே ஸந்தோஷிக்கும்படி செய்கிறுரோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**निर्मातृणां घटानां कुलजलधिमणिर्नीलकण्ठाभिधोऽयं**
**पश्यन्नित्यं मुनीनां नयवचनगणैर्योगिराट्प्रत्ययार्थम् ।**
**सशपथं गाहमानः प्रपेदे स्वस्त्रीदण्डाग्रहस्तस्सरसि**
**तारुण्यं यत्प्रसादात्तमनणुमगुरुं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९८**

**நிர்மாத்ருணாம் க4டானாம் குலஜலதி4மணிர்நீலகண்டா2பி4தோ4(அ)யம்**
**பஶ்யந்நித்யம் முனீனாம் நயவசனக3ணைர்யோகி3ராட்ப்ரத்யயார்த2ம் ।**
**ஸஶபத2ம் கா3ஹமானः ப்ரபேதே3 ஸ்வஸ்த்ரீத3ண்டா3க்3ரஹஸ்தஸ்ஸரஸி**
**தாருண்யம் யத்ப்ரஸாதா3த்தமனணுமகு3ரும் குஞ்சிதாங்க்4ரிம் ப4ஜே(அ)ஹம் ॥ 298**

298. குயவனுடைய வம்சத்தில் பிறந்தவஞன நீலகண்டன் என்று பெயர் உள்ள பக்தன் யாதொரு பரமேச்சுவரஜுன நித்தியம் தரிசித்தும் நம்பிக்கையை முன்னிட்டு திருஸஹஸ்ர முனீஸ்வரர்களுடைய நியாயத்தோடு கூடின வார்த்தைகளுள் தனது ஸ்திரீயின் கையில் உள்ள தண்டத்தின் நுனியை பிடித்துக் கொண்டு குளத்தில்

(யளவனேச்வரம் என்ற தீர்த்தத்தில்) சபதத்தோடுகூட ஸ்ஞனம் செய்து யாதொரு பரமேச்வர பிரஸாதத்தால் இளமை பர்வத்தை அடைந்தாஞே அப்படிப்பட்ட சிறியது பெரியது இல்லாதவரான குஞ்சிதாங்கிரிம். இக்கதை பெரியபுராணத்தில், சிதம்பர ஸபாநாத புராணத்திலும் கூறப்பட்டுள்ளது.

**लास्यं द्रष्टुं यदीयं शिखिनि दशशिरांस्याजुहावातिभक्त्या**
**रक्षोनाथस्तथाद्रेर्निकट भुविफणामण्डलं भोगिराजः ।**
**अन्ये देवाश्चदैत्याः तपसि च कठिनेस्वां तनूं निर्दहन्तो**
**जातास्सिद्धाश्च साध्यानरहरिविनुतं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ २९९**

**லாஸ்யம் த்³ரஷ்டும் யதீ³யம் ஶிகி²னி த³ஶஶிராம்ஸ்யாஜுஹாவாதிப⁴க்த்யா**
**ரக்ஷோநாத²ஸ்ததா²த்³ரேர்நிகட பு⁴விப²ணாமண்ட³லம் போ⁴கி³ராஜ꞉ ।**
**அன்யே தே³வாஶ்வதை³த்யா꞉ தபஸி ச கடி²னேஸ்வாம் தனூம் நிர்த³ஹந்தோ**
**ஜாதாஸ்ஸித்³தா⁴ஶ்ச ஸாத்⁴யானரஹரிவினுதம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 299**

299. யாதொரு பரமேச்வரனுடைய தாண்டவத்தைப் பார்க்கவேண்டி ராக்ஷஸேந்திரன் (ராவணன்) மிகவும் பக்தியோடு அக்கினியில் பத்து தலைகளையும் அறுத்து ஹோமம் செய்தாஞே அவ்விதமே கைலாஸத்தின் தாழ்வரையில் ஆதிசேஷன் தனது தலைகளின் கூட்டங்களை அக்கினியில் ஹோமம் பண்ணிஞஞே; மற்றும் இதரர்களான தேவர்கள், தைத்தியர்கள், ஸித்தர்கள், ஸாத்தியர்கள் கடினமான தபஸில் தங்கள் தங்கள் சரீரங்களை பொசிக்கினவர்களாக ஆஞர்களோ அப்படிப்பட்ட நரஸிம்ஹரால் துதிக்கப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**குறிப்பு:** ராவணஞல் இயற்றப்பட்ட சிவதாண்டவ ஸ்தவமும் இம்மூர்த்தியைக் குறித்ததாகும்.

**स्वामिन्संसारवार्धावधिकभयकरे दुस्तरे पाशनक**
**च्छन्नेमग्नान्तरं मामनधिगतसदाचारवृत्तिं शठाग्रयम् ।**
**दीनं त्वत्पादपूजा विमुखमघयुतं रक्षरक्षेत्यजस्रं**
**सर्वेलोकाश्श्रयन्ते यमपिसदसि तं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३००**

**ஸ்வாமின்ஸம்ஸாரவார்தா⁴வதி⁴கப⁴யகரே து³ஸ்தரே பாஶனக**
**ச்ச²ன்னேமக்³னாந்தரம் மாமனதி⁴க³தஸதா³சாரவ்ருத்திம் ஶடா²க்³ரயம் ।**
**தீ³னம் த்வத்பாத³பூஜா விமுக²மக⁴யுதம் ரக்ஷரக்ஷேத்யஜஸ்ரம்**
**ஸர்வேலோகாஶ்ஶ்ரயந்தே யமபிஸத³ஸி தம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 300**

300. ஸ்வாமின், அதிபயங்கரமும், தாண்டமுடியாததும் பாசமாகிற மத்ஸயங்களால் நிறைந்ததுமான ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் மூழ்கினவனும், ஸதாசாரம்

இல்லாதவனும், சடனும், தீனனும், உனது பாதத்தை அர்ச்சிக்காதவனும், பாபத்தோடு கூடினவனுமான என்னை ரக்ஷிக்கவேணும் ரக்ஷிக்க வேணுமென்று மிகவும் எல்லாப் பிராணிகளும் ஸபையில் யாதொரு பரமேச்வரனை ஸேவிக்கிறதுகளோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**यद्यप्यैश्वर्यभाजो विधिहरिमुखरास्सन्तिदेवा जगत्यां**
**तेषां कश्चिद्युगान्ते नहि पुनरपरो रुद्रएको महर्षिः ।**
**देवो विश्वाधिकोग्रयो भवति विभुरिति प्राहुरश्रान्तवाचः**
**वेदा यं पञ्चभूतप्रभवलयकरं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०१**

**யத்[3]யப்யைஶ்வர்யபா[4]ஜோ விதி[4]ஹரிமுக[2]ராஸ்ஸந்திதே[3]வா ஜக[3]த்யாம்**
**தேஷாம் கஶ்சித்[3]யுகா[3]ந்தே நஹி புனரபரோ ருத்[3]ரஏகோ மஹர்ஷி꞉ ।**
**தே[3]வோ விஶ்வாதி[4]கோக்[3]ரயோ ப[4]வதி விபு[4]ரிதி ப்ராஹுரஶ்ராந்தவாச꞉**
**வேதா[3] யம் பஞ்சபூ[4]தப்ரப[4]வலயகரம் குஞ்சிதாங்க்[4]ரிம் ப[4]ஜே(அ)ஹம் ॥ 301**

301. உலகத்தில் ஐச்வர்யங்களோடு கூடினவர்களான பிர்ம்ஹா, விஷ்ணு இவர்களை ஆதியாக உள்ள தேவர்கள் இருக்கிருர்கள் என்பது வாஸ்தவமே. அவ்விதம் இருந்த போதிலும் அவர்களுக்குள் ஒருவராவது யுகாந்த காலத்தில் உயிரோடு இருப்பவர் இல்லை. அக்காலத்தில் மஹரிஷியும் இரண்டாம் பேர் அற்றவரும் தேவரும் உலகை கடந்தவரும் முதல்வரும் பிரபுவுமான ருத்திரர் ஒருவர்தான் பிரகாசிக்கிருர் என்று நீண்ட வாக்குகளை உடைய வேதங்கள் யாதொரு பரமேச்வரனை குறித்துச் சொல்லுகிறதுகளோ அப்படிப்பட்ட பஞ்ச பூதங்களுக்கும் உத்பத்தி விநாசத்தை செய்கிறவரான குஞ்சிதாங்கிரிம்.

**यस्माच्चन्द्रार्धचूडान्मृदुहसितमुखान्नीलकण्ठात् त्रिणेत्रात्**
**वेदान्तोद्गीतवृत्ताद्विधिहरिजनकात् विश्वमायाविलासात् ।**
**वामावामाङ्गभागात् भसित वरतनोः चित्सभेशात् ममैतत्**
**चेतोनान्यं सुरेन्द्रं स्मरति नटपतिं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०२**

**யஸ்மாச்சந்த்[3]ரார்த[4]சூடா[3]ன்ம்ருது[3]ஹஸிதமுகா[2]ந்நீலகண்டா[2]த் த்ரிணேத்ராத்**
**வேதா[3]ந்தோத்[3]கீ[3]தவ்ருத்தாத்[3]விதி[4]ஹரிஜனகாத் விஶ்வமாயாவிலாஸாத் ।**
**வாமாவாமாங்க[3]பா[4]கா[3]த் ப[4]ஸித வரதனோ꞉ சித்ஸபே[4]ஶாத் மமைதத்**
**சேதோனான்யம் ஸுரேந்த்[3]ரம் ஸ்மரதி நடபதிம் குஞ்சிதாங்க்[4]ரிம் ப[4]ஜே(அ)ஹம் ॥ 302**

இது முதல் நான்கு சுலோகங்களில் தனது அனுபவத்தை விளக்குகிருர்.

302. அர்த்த சந்திரனைத் தரித்தவரும் மந்தஹாஸத்தோடு கூடினவரும், நீல மான கண்டத்தை உடையவரும், மூன்று கண்கள் உள்ளவரும், வேதாந்தங்களில் சொல்லப்பட்ட சரித்திரங்களை உடையவரும், பிர்ம்ஹ விஷ்ணுக்களை உண்டு பண்ணினவரும், நீண்ட மாயாவிலாஸத்தை உடையவரும் ஸ்திரீரூபமான வாமபா

கத்தை தரித்தவரும், விபூதி அணிந்த திருமேனியரும், சித்ஸபைக்கு ஈசருமான யாதொரு பரமேச்வரனைக் காட்டிலும் வேறான தேவரை எனது சித்தமானது நினைக்கவில்லையோ அப்படிப்பட்ட நடபதியான குஞ்சிதாங்கிரிம்.

**बाल्ये क्रीडाविमुग्धः पुनहमभवं यौवने मीनकेतोः**
**लक्ष्यो लज्जाविहीनः परमुदर भृतौ काकवत्सार्वकालम् ।**
**देशाद्देशादटन्त्वत्पदयुगजलजं नार्चयं पापयोगात्**
**सर्वं तत्क्षम्यतामित्ययमहमभजं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०३**

**பா³ல்யே க்ரீடா³விமுக்³த⁴: புனஹமப⁴வம் யௌவனே மீனகேதோ:**
**லக்ஷ்யோ லஜ்ஜாவிஹீன: பரமுத³ர ப்⁴ருதௌ காகவத்ஸார்வகாலம் ।**
**தே³ஶாத்³தே³ஶாத³டந்த்வத்பத³யுக³ஜலஜம் நார்சயம் பாபயோகா³த்**
**ஸர்வம் தத்க்ஷம்யதாமித்யயமஹமப⁴ஜம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 303**

303. பால்யத்தில் விளையாட்டினால் மூடனும் யௌவனத்தின் மன்தமனுக்கு லக்ஷியனும், லஜ்ஜை அற்றவனும், எப்பொழுதும் காகம்போல் வயிற்றை நிறப்புவ தற்கு ஒவ்வொரு ஊர்கள் தோறும் அலைந்தும், பாபத்தின் ஸம்பந்தத்தால் தாமரை மலர்போன்ற உனது இரண்டு சரணங்களை பூஜிக்கவில்லை. இவை எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளவேணும் என்று யாதொரு பரமேச்வரனை நான் அடைந்தேனோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**सद्वृत्तां स्रग्धराङ्गां विपुलगुणवरालङ्कृतिं मञ्जुपाक**
**स्थायी शय्यारसाद्यैर्विबुधपरिबृढाह्लादिरीतिं सुवृत्तिम् ।**
**वेदान्तार्थप्रबोद्ध्रीं सुगुणपदगतिं योऽस्मदीयां स्तुतिं तां**
**अङ्गीकुर्वन्सुखं मे प्रदिशति गुरु तं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०४**

**ஸத்³வத்தாம் ஸ்ரக்³த⁴ராங்கா³ம் விபுலகு³ணவராலங்க்ருதிம் மஞ்ஜுபாக**
**ஸ்தா²யீ ஶய்யாரஸாத்³யைர்விபு³த⁴பரிப்³ருடா⁴ஹ்லாதி³ரீதிம் ஸுவ்ருத்திம் ।**
**வேதா³ந்தார்த²ப்ரபோ³த்³தீ⁴ம் ஸுகு³ணபத³க³திம் யோ(அ)ஸ்மதீ³யாம் ஸ்துதிம் தாம்**
**அங்கீ³குர்வன்ஸுக²ம் மே ப்ரதி³ஶதி கு³ரு தம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 304**

304. ஸ்ரக்தரை என்கிற விருத்தத்தோடு என்கிற கூடினதும், விஸ்தாரமான குணம், ச்ரேஷ்டமான அலங்காரம், அழகான பாகம், ஸ்தாயி, செய்யா, ரஸம் இவை களால் வித்துவான்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிற ரீதியை உடையதும், நல்ல விர்த்தியோடு கூடினதும், வேதாந்தங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களைப் போதிக்கிறதும், நற்குணங்களோடு கூடின பதவின்யாஸங்களை உடையதுமான என்னுடைய குஞ்சிதாங்கிரி ஸ்தவம் என்று பிரஸித்தமான இத்துதியை அங்கீகரித்து

யாதொரு பரமேச்வரன் எனக்கு அதிகமான ஸுகத்தை (ஆத்மஸுகத்தை) கொடுக்கிருரோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**यश्शम्भुर्नृत्तराण्मे प्रबलतरमहामन्त्रसिद्धिं प्रदत्वा**
**गुर्वीयोगस्य सिद्धिं जननमृतिहरं चात्मबोधं महान्तम् ।**
**सूतादीनां विमुक्तिप्रदमपि महितं गौरवं पत्रमूलं**
**स्वं नृत्तं दर्शयित्वा सुखयति नितरां कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०५**

**யஶ்ஶம்பு⁴ர்ந்ருத்தராண்மே ப்ரப³லதரமஹாமந்த்ரஸித்³தி⁴ம் ப்ரத³த்வா**
**கு³ர்வீம்யோக³ஸ்ய ஸித்³தி⁴ம் ஜனனம்ருதிஹரம் சாத்மபோ³த⁴ம் மஹாந்தம் ।**
**ஸூதாதீ³னாம் விமுக்திப்ரத³மபி மஹிதம் கௌ³ரவம் பத்ரமூலம்**
**ஸ்வம் ந்ருத்தம் த³ர்ஶயித்வா ஸுக²யதி நிதராம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 305**

305. யாதொரு சம்புவான நடராஜர் எனக்கு ரொம்பவும் பலமான மஹாமந்திர ங்களுடைய ஸித்தியையும், பிறப்பு இறப்பை போக்கடிக்கிற ஆத்ம போதத்தையும். பெற்ருன் சாம்பான் முதலியவர்களுக்கு முக்தியை அளிக்கக்கூடியதும், உணர்ந்தது மான ஏடு எழுதி அனுப்பின காரணம் பற்றி உண்டான கௌரவத்தையும் கொடுத்து தனது தாண்டவத்தையும் காண்பிவித்து மிகவும் ஸுகத்தோடு கூடினவனுக செய்கிருரோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**குறிப்பு:**

*அடியார்க் கெளியவன் சிற்றம்பலவன்*
*கொற்றங் குடியார்க்கெழுதிய கைச்சீட்டு*
*படிமிசைபிப் பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத்*
*தீக்கைபண்ணி முத்திகொடுத்து முறை.*

என்று ஓர் ஏட்டில் எழுதி தனது கையெழுத்திட்டு பரமேச்வரன் உமாபதிசிவத்தினி டம் அனுப்பிஞர் என்று உமாபதிசிவ சரித்திரம் கூறுகிறது.

**क्रोशं क्रोशं यदग्रेस्वपतिमपिरतिर्मन्मथं श्रीकुमारं**
**शादूलाङ्गेश्चडिम्भस्सुखतरमभजद्दुग्ध कल्लोलराशिम् ।**
**स्तावं स्तावं वरेण्यं गगननटपतिं यं च वाचामलक्ष्यं**
**तोषं तोषं लभन्ते सकलमपिजनाः कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०६**

**க்ரோஶம் க்ரோஶம் யத³க்³ரேஸ்வபதிமபிரதிர்மன்மத²ம் ஶ்ரீகுமாரம்**
**ஶாதூ³லாங்கே³ஶ்சடி³ம்ப⁴ஸ்ஸுக²தரமப⁴ஜத்³து³க்³த⁴ கல்லோலராஶிம் ।**
**ஸ்தாவம் ஸ்தாவம் வரேண்யம் க³க³னனடபதிம் யம் ச வாசாமலக்ஷ்யம்**
**தோஷம் தோஷம் லப⁴ந்தே ஸகலமபிஜனாः குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 306**

306. யாதொரு பரமேச்வரனுக்கு முன்பாக ரதியானவள் அழுது அழுது தனக்கு பர்த்தாவும் லக்ஷ்மீ குமாரனுமான மன்மதனையும், வியாக்கிரபாதரின் குமாரரான உபமன்யு என்பவர் பாற்கடலையும் மற்றும் ஸுகங்களையும் அடைந்தார்களோ, ஆகாசத்தில் நடனம் செய்கிறவரும், ச்ரேஷ்டரும், வாக்குகளுக்கு எட்டாதவருமான யாதொரு பரமேச்வரனை துதித்துத்துதித்து ஜனங்கள் மிகவும் ஸந்தோஷத்துடன் ஸகல இஷ்டங்களையும் அடைகிறார்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**मन्दं मन्दं यदीयं जनिमसुरसरिद्वारयाव्यासजाद्याः**
**सेकं सेकं विराजोहृदयमधिगतं यत्पदं भावयन्तः ।**
**कालं कालं दहन्तो दुरधिगमतम : काननं ज्ञानयोगात्**
**लाभं लाभं प्रबोधं वरसुखमभजन्कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०७**

**மந்த³ம் மந்த³ம் யதீ³யம் ஜனிமஸுரஸரித்³வாரயாவ்யாஸஜாத்³யா:**
**ஸேகம் ஸேகம் விராஜோஹ்ருத³யமதி⁴க³தம் யத்பத³ம் பா⁴வயந்த: ।**
**காலம் காலம் த³ஹந்தோ து³ரதி⁴க³மதம : கானனம் ஜ்ஞானயோகா³த்**
**லாப⁴ம் லாப⁴ம் ப்ரபோ³த⁴ம் வரஸுக²மப⁴ஜன்குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 307**

307. வியாஸகுமாரரான சுகர் முதலிய முனிவர்கள் மெள்ள மெள்ள யாதொரு பரமேச்வர ஸ்வரூபமான லிங்கத்தை கங்காதீர்த்தத்தினால் அபிஷேகம் செய்தும் விராட் புருஷனுடைய ஹிருதயத்தை அடைந்தவரான யாதொரு பரமேச்வரனை ஒவ்வொரு காலங்களிலேயும் பாவனை செய்தும், ஞான யோகத்தால் அக்ஞானமாகிற காட்டைப் பொசிக்கியும், ஆத்ம ஞானத்தை அடைந்தும் ச்ரேஷ்டமான ஸுகத்தை அடைந்தார்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**भोजं भोजं यदर्चाजनितमनुपमं भोगमध्यात्मयोगात्**
**तारं तारं भवाब्धिं विपुलभयकरं यस्यभावात्सुधीन्द्राः ।**
**दाहं दाहं हृदन्तर्गतमतिजरठं पाशवर्गं यद**
**जापं जापं रमन्ते परमहसिपदे कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०८**

**போ⁴ஜம் போ⁴ஜம் யத³ர்சாஜனிதமனுபமம் போ⁴க³மத்⁴யாத்மயோகா³த்**
**தாரம் தாரம் ப⁴வாப்³தி⁴ம் விபுலப⁴யகரம் யஸ்யபா⁴வாத்ஸுதீ⁴ந்த்³ரா: ।**
**தா³ஹம் தா³ஹம் ஹ்ருத³ந்தர்க³தமதிஜரட²ம் பாஶவர்க³ம் யத³**
**ஜாபம் ஜாபம் ரமந்தே பரமஹஸிபதே³ குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 308**

308. ஞானிகள் யாதொரு பரமேச்வர பூஜையினால் உண்டானதும், ஒப்பற்றதுமான போகத்தை அனுபவித்தும் அத்யாத்ம யோகத்தினால் ரொம்பவும் பயங்கரமான ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தை தாண்டியும் யாதொரு பரமேச்வர பாவனையால் ஹிருதயத்திலுள்ளதும், மிகவும் கிழத்தன்மை வாய்ந்ததுமான பாசவர்க்கத்தை

பொசிக்கியும், யாதொரு பரமேச்வரனுடைய மந்திர வர்ணங்களை ஜபித்துக்கொண்டு ஜோதிர்மயமான ஸ்தானத்தில் விளையாடுகிறுர்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**बोधं बोधं यदीयं नटनमनुपमं श्रौततत्वार्थगर्भं**
**ध्यायं ध्यायं हृदब्जे यमपि च महसां पुञ्जमव्याजमूर्तिम् ।**
**वाहं वाहं यदङ्घ्रिं मनसि फणितरक्ष्वह्निं जैमिन्यभिख्याः**
**प्रापुस्सर्वेसदायत्सदसिनिवसतिं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३०९**

**போ³த⁴ம் போ³த⁴ம் யதீ³யம் நடனமனுபமம் ஶ்ரௌததத்வார்த²க³ர்ப⁴ம்**
**த்⁴யாயம் த்⁴யாயம் ஹ்ருத³ப்³ஜே யமபி ச மஹஸாம் புஞ்ஜமவ்யாஜமூர்திம் ।**
**வாஹம் வாஹம் யத³ங்³க்⁴ரிம் மனஸி ப²ணிதரக்ஷ்வஹ்னிம் ஜைமின்யபி⁴க்²யா:**
**ப்ராபுஸ்ஸர்வேஸதா³யத்ஸத³ஸிநிவஸதிம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 309**

309. பதஞ்ஜலி, வியாக்கிரபாதர், ஜைமினி என்கிற முனிவர்கள் யாதொரு பரமேச்வரனுடையதும், ஒப்பற்றதும், வேதங்களில் சொல்லப்பட்டதுமான நடனத்தை பார்த்தும் ஹிருதயத்தில் காரணமன்றி மூர்த்தீகரித்ததும் காந்தி ஸமூஹமும் ஆன யாதொரு பரமேச்வரனை தியானம் செய்தும், அவருடைய பாதங்களை மனதில் கருதியும், எப்பொழுதும் யாதொரு பரமேச்வரனுடைய ஸபையில் வஸிக்கிறுர்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**वाचं वाचं महान्तश्शिवहरगिरिजाक्न्तदेवेतिपूताः**
**वर्जं वर्जं विवर्ज्यं बहुतरविषमक्लेशमायाविमोहम् ।**
**त्यागं त्यागं कठोरां त्रिविधपरिचयामीषणाख्यां पिशाचीं**
**ध्यायन्तो यं भजन्ते सततमपि शिवं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३१०**

**வாசம் வாசம் மஹாந்தஶ்ஶிவஹரகி³ரிஜாக்ந்ததே³வேதிபூதா:**
**வர்ஜம் வர்ஜம் விவர்ஜ்யம் ப³ஹுதரவிஷமக்லேஶமாயாவிமோஹம் ।**
**த்யாக³ம் த்யாக³ம் கடோ²ராம் த்ரிவித⁴பரிசயாமீஷணாக்²யாம் பிஶாசீம்**
**த்⁴யாயந்தோ யம் ப⁴ஜந்தே ஸததமபி ஶிவம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம்**
**॥ 310**

310. மஹான்கள் சிவ ஹர கிரிஜாகாந்த தேவ என்கிற நாமாக்களை ஸதா உச்சரித்து பரிசுத்தர்களாய் தள்ள முடியாததும் அதிகமான கிலேசத்தை உண்டு பண்ணி வைக்கிறதுமான மாயாவிமோஹத்தை தள்ளியும், கொடுமையும் முக்குண ஸம்பந்தத்தோடு கூடின ஆசை என்கிற பிசாசத்தை தியானம் செய்தும், யாதொரு சிவஸ்வரூபியான பரமேச்வரனை எப்பொழுதும் ஸேவிக்கிறுர்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**नावं धावं सदायत्प्रियकरनिलयं भूतिरुद्राक्षवर्गैः**
**भूषं भूषं स्वकीयां तनुमपि चरितं यस्य वेदान्तगीतम् ।**
**कर्णं कर्णं नितान्तं त्रिषवणयजनं ब्रह्मनिष्ठायतीन्द्राः**
**कारं कारं लभन्ते भवपदमभवं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३११**

**நாவம் தா⁴வம் ஸதா³யத்ப்ரியகரநிலயம் பூ⁴திருத்³ராக்ஷவர்கை³:**
**பூ⁴ஷம் பூ⁴ஷம் ஸ்வகீயாம் தனுமபி சரிதம் யஸ்ய வேதா³ந்தகீ³தம் ।**
**கர்ணம் கர்ணம் நிதாந்தம் த்ரிஷவணயஜனம் ப்³ரஹ்மநிஷ்டா²யதீந்த்³ரா:**
**காரம் காரம் லப⁴ந்தே ப⁴வபத³மப⁴வம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 311**

311. பிர்ம்ஹநிஷ்டாளான ஸன்யாஸிகள் எப்பொழுதும் யாதொரு பரமேச்வரனுக்கு பிரியங்கரமான க்ஷேத்திரங்களை அடைந்தும், பஸ்ம, ருத்திராக்ஷங்களால் தனது சரீரத்தை அலங்கரித்தும் யாதொரு பரமேச்வரனுடைய வேதாந்தங்களில் கூறப்பட்ட சரித்திரத்தை கேட்டும் மிகவும் மூன்று காலங்களில் பூஜித்தும் உற்பத்தி அற்றதான பிர்ம்ஹ பதத்தை (இரண்டறக் கலத்தல்) அடைகிறுர்களோ அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**नामं नामं सदायं नटपतिमलभं सत्कलत्रं सुपुत्रं**
**पाठं पाठं यदग्रेऽप्यकृतकवचनान्यापसब्जा कटाक्षम् ।**
**वारं वारं विभुं यं हविरहमददां सप्ततन्तुष्वचिन्त्यं**
**नित्यं नित्यं प्रपद्येशरणमसुलभं कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३१२**

**நாமம் நாமம் ஸதா³யம் நடபதிமலப⁴ம் ஸத்கலத்ரம் ஸுபுத்ரம்**
**பாட²ம் பாட²ம் யத³க்³ரே(அ)ப்யக்ருதகவசனான்யாபஸப்³ஜா கடாக்ஷம் ।**
**வாரம் வாரம் விபு⁴ம் யம் ஹவிரஹமத³தா³ம் ஸப்ததந்துஷ்வசிந்த்யம்**
**நித்யம் நித்யம் ப்ரபத்³யேஶரணமஸுலப⁴ம் குஞ்சிதாங்க்⁴ரிம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 312**

**அவதாரிகை**: இவ்விரண்டு சுலோகங்களிஞல் தனது அனுபவத்தை விளக்கி ஸ்துதியை முடிக்கிறுர்.

312. நான் எப்பொழுதும் யாதொரு பரமேச்வரஞை நடபதியை நமஸ்கரித்து நல்ல பத்தினியையும், நல்ல புத்திரஜையும் அடைந்தேன். யாதொரு பரமேச்வரனுடைய ஸன்னதியில் வேதமந்திரங்களை (ஸ்ரீருத்திரம், கைவல்யம், தைத்தரீயம் முதலிய ஔபநிஷத மந்திரங்கள்) பாராயணம் செய்து லக்ஷ்மீ கடாக்ஷத்தை அடைந்தேன். நான் யாகங்களில் விபுவான யாதொரு பரமேச்வரஜை உத்தேசித்து ஹுவிஸுகளை அர்ப்பணம் செய்தேன். நித்தியரான யாதொரு பரமேச்வரஜை சரணமாக அடைந்தேன் அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**श्रावं श्रावं श्रुतिभ्यां यदमल चरितं यत्पदाम्भोजमाध्वीं**
**पायं पायं सभायां ममचरसनया यं प्रभुं मानसेन ।**
**स्मारं स्मारं प्रसन्नं श्रुतिशिखरगतं भुक्तिमुक्तिप्रदं यं**
**दर्शं दर्शं प्रबुद्धोस्म्यतनुबुधदृशा कुञ्चिताङ्घ्रिं भजेऽहम् ॥ ३१३**

**ஶ்ராவம் ஶ்ராவம் ஶ்ருதிப்⁴யாம் யத³மல சரிதம் யத்பதா³ம்போ⁴ஜமாத்⁴வீம்**
**பாயம் பாயம் ஸபா⁴யாம் மமசரஸனயா யம் ப்ரபு⁴ம் மானஸேன ।**
**ஸ்மாரம் ஸ்மாரம் ப்ரஸன்னம் ஶ்ருதிஶிக²ரக³தம் பு⁴க்திமுக்திப்ரத³ம் யம்**
**த³ர்ஶ த³ர்ஶம் ப்ரபு³த்³தோ⁴ஸ்ம்யதனுபு³த⁴த்³ருஶா குஞ்சிதாங்க்⁴ரிம்**
**ப⁴ஜே(அ)ஹம் ॥ 313**

313. யாதொரு பரமேச்வரனுடைய பரிசுத்தமான சரித்திரத்தை காதுகளினுல் கேட்டும், யாதொரு பரமேச்வரனுடைய பாதத்தாமரையின் ரஸத்தை எனது நாக்கினுல் ஸபையில் அருந்தியும், வேதத்தின் சிரஸில் உள்ளவரும், பிரஸன்னரு மான யாதொரு பரமேச்வரனை தியானம் பண்ணியும், போக மோக்ஷத்தை கொடுப்ப வரான யாதொரு பரமேச்வரனை தரிசனம் செய்து ஞான கண்களோடு அறிவுள்ளவ னுக ஆனேனே அப்படிப்பட்ட குஞ்சிதாங்கிரிம்.

**एतत्स्तोत्रं पठन्ति प्रतिदिनमसकृद्येममोमापतेर्वा**
**गुद्तं चित्सभायां विरचित परमानन्दनृत्तस्यशम्भोः ।**
**अग्रेलब्ध्वाऽखिलेष्टानिहतनयकलत्रादिमानात्मयज्ञा**
**दन्तेकैवल्यसंज्ञं पदमपिमनुजास्संलभन्तां नितान्तम् ॥ ३१४**

**ஏதத்ஸ்தோத்ரம் பட²ந்தி ப்ரதிதி³னமஸக்ருத்³யேமமோமாபதேர்வா**
**கு³த்³தம் சித்ஸபா⁴யாம் விரசித பரமாநந்த³ந்ருத்தஸ்யஶம்போ⁴: ।**
**அக்³ரேலப்³த்⁴வா(அ)கி²லேஷ்டானிஹதனயகலத்ராதி³மானாத்மயஜ்ஞா**
**த³ந்தேகைவல்யஸஞ்ஜ்ஞும் பத³மபிமனுஜாஸ்ஸம்லப⁴ந்தாம் நிதாந்தம் ॥ 314**

இந்த ஸ்தோத்திரத்தை பாராயணம் செய்வதால் உண்டாகும் பலன்களை விளக்குகிறுர்.

314. உமாபதியான என்னுடைய வாக்கில் இருந்து உண்டானதும், சித்ஸபை யில் பரமானந்த தாண்டவம் செய்கிற சம்புவான பரமேச்வரனைப்பற்றினதுமான இந்த ஸ்தோத்திரத்தை ஒவ்வொரு நாளும் அடிக்கடி எவர்கள் படிக்கிறுர்களோ அவர்கள் இப்புவியில் மிகவும் முதலில் பத்தினி, புத்திரன், பொருள் முதலிய ஸகல இஷ்டங்களையும் அடைந்து ஞானத்தோடு கூடினவனுக ஆகி இறுதியில் கைவல்யம் என்று பெயருள்ள பதத்தையும் அடையட்டும்.

**उमापतिर्नामवनाश्रमोहं त्रयोदशाधिक्यशतत्रयान्वितम् ।**
**श्रीकुञ्चितामिंस्तवराजमुक्त्या साक्षादपश्यं नटनं सभापतेः ॥ ३१५**

**உமாபதிர்நாமவநாஶ்ரமோஹம் த்ரயோத³ஶாதி⁴க்யஶதத்ரயான்விதம் ।**
**ஶ்ரீகுஞ்சிதாமிம்ஸ்தவராஜமுக்யா ஸாக்ஷாத³பஶ்யம் நடனம் ஸபா⁴பதே꞉ ॥ 315**

315. உமாபதி என்று பெயர் உள்ள வர்ஞச்ரமியான நான் முன்நூற்றுபதின் மூன்று எண்களோடு கூடின ஸ்ரீகுஞ்சிதாங்கிரி ஸ்தவராஜம் என்று பெயர் உள்ள ஸ்துதியை சொல்லி ஸபாபதியினுடைய நடனத்தை ஸாக்ஷாத்தாகப் பார்த்தேன்.

இதனால் இதை பாராயணம் செய்து வந்தால் தாண்டவ தரிசனம் கைகூடும் எனக்கருதப்படுகிறது.

**॥ इति श्रीमदुमापतिशिवप्रणीतः ॥**
**॥ श्री कुञ्चिताङ्घ्रिस्तवः सम्पूर्णः ॥**

**॥ இதி ஶ்ரீமது³மாபதிஶிவப்ரணீத꞉ ॥**
**॥ ஶ்ரீ குஞ்சிதாங்க்⁴ரிஸ்தவ꞉ ஸம்பூர்ண꞉ ॥**